# குயில்

ஆசிரியர் : பாரதிதாசன்



கே.மாதவன்.



# குயில்

ஒரு பெயர்ப் பன்னூல்

ஆசிரியர் உரிமையாளர்

**பாரதிதாசன்**

விலை ரூபாய் ஒன்று.


குயில் நிறுவனம் அலுவலகம்

பாரதிதாசன் பதிப்பகம்

95, பெருமாள் கோயில் தெரு

புதுச்சேரி பி.இ.

ஆ. மன்னர் மன்னன்

அமைச்சர்.


---



பக்கம் 14-ல் 2 வரியும், 15-ல் 3 வரியும் 28 14 வரியும்
3-ல் 15 வரியும் 13-ம் பக்கம் பார்க்க ... பக்கம் 2-ம் பக்கம் 3-ம்
பக்கம் பார்க்க


அச்சிடப்பட்டது: செந்தமிழ்ப் பதிப்பகம் புதுக்கோட்டை.

# குயில்

எங்கள் திருநாட்டில் எங்கள்நல் ஆட்சியே
பொங்கிடுக வாய்மை பொலிந்திடுக என்றேநீ
செங்கதிர் சீர்க்கையால் பொன் வள்ளிப் பூசிய
கங்குல் நிகர்த்த கருங்குயிலே கூவாயே.

கன்னடம்தெ லுங்குமலை யாளம் கழிதுளுவம்
முன்னுடைந்தும் மூவாது மூள்பகைக்கும் சோராது
மன்னும்தமிழ் தான் இவ் வையத்தை யாள்க எனக்
கன்னற் குரலெடுத்துக் கூவாய் கருங்குயிலே.

வராதெனச் சொன்னாரும் வருந்தத்தன் ஆட்சி
இராத இடமில்லை என்றுநிலை நாட்டத்
திராவிட நாடு சிறைநீங்க என்று
குரலே முரசாகக் கூவாய் கருங்குயிலே.

உண்ணல் உடுத்தல் உயிர்த்தல்என் செந்தமிழை
நண்ணலும் ஆம்என்று நாட்டுக; வேறுமொழி
எண்ணல் நிறுவல் இலாதுகல்வி கட்டாயம்
பண்ணல் பயன்என்று கூவாய் கருங்குயிலே.

செந்தமிழைச், செந்தமிழ் நாட்டைச் சிறைமீட்க
நந்தமிழர் உள்ளத்தில், வையம் நடுநடுங்கும்
வெந்தணல் ஒன்று விரைந்து வளர்ந்ததென்று
குந்திக் குரலெடுத்துக் கூவாய் கருங்குயிலே

இளைஞர் துடிக்கின்றார் தமிழின் நிலை எண்ணிக்
கிளைஞர் அடைகின்ற கேடுபொறார் இங்கு
விளையாட வேண்டாமே ஆளவந்தார்! வாழ்வின்
களைநீக் குகஎன்று கூவாய் கருங்குயிலே.

பாலோடு நேர்தமிழும் பைந்தமிழ மக்களும்
ஆலோடு வேர் என் றறிந்திருந்தும் ஆளவந்தார்,
மேலோடு பேசிவிடுவரேல் அவ் வாட்சி
சாலோடு நீர் என்று சாற்றாய் கருங்குயிலே.

# காதல் வாழ்வு

ஒன்று

மணம் முடிந்தது.

தனியிடம், விடுதலைபெற்ற இரண்டுள்ளம், அளவு கடந்த அன்பு—இவை மகிழ்ச்சிக் கொடியேற்றிக் காதல் முரசு முழக்கின—இன்ப விழா! மு[illegible]

இரண்டு

ஒருநாள் அவர்கள் [illegible] உலகில் இறங்கிவந்து பேசலுற்றார்கள்.

"மக்கள் தொடர்பில்லாதது. தென்றலில் சிலிர்க்கும் தழை மரங்கள் உள்ளது, சுற்றிச் சிறந்த நீர் நிலையின் துறையில் அமைந்த நுழைவாயிலுள்ளது. அழகிய சிறுகுடில்! நாம் அங்கே தங்கலாம்—இது என் அவா அத்தான்."

"ஆம். குறைவற்ற தனிமை!"

புறந்தார்கள்

மூன்று

"நாயின் நாக்கைப்போன்ற சிவந்த மெல்லடியைத் தூக்கி [illegible] குடிசையில்."

"நான் மட்டுமா?"

[illegible]து அவள் உள்ளம்!

இமைப்போதில் ஒன்றில் ஒன்று புதைந்த இரண்டுடல் குடிசையில் நுழைந்தன.

"விட்டுப்பிரிவேன் என்று அச்சப்பட்டாயா?"

"மன்னிக்க வேண்டும்"

குடிசை சாத்தப்பட்டது.

நாற்புறம் நீர்நிலையில் விழுந்து கொண்டிருக்கும் இச்சிச்சென்ற ஒலி குடிசைக்குள் சென்றது. அதே ஒலி குடிசையி[illegible] வெ[illegible]ந்தது; இது எதிரொலியன்று.



[13-ம் பக்கம் பார்க்க]

"கப்பல் வந்திருக்கிறது!"

"மெல்லப்பேசு!"

"என்ன ஓசை குடிசையின் உட்கட்டில்? விட்டு விட்டு இசைக்கும் ஒருவகைச் சிட்டுக்குரல்!"

"என்ன சொன்னார் அப்பா?"

"அனுப்ப வேண்டுமாம் உம்மை!"

"சிங்கைக்கா?"

"ஆம்!—என்ன அங்கே திட்டென்று விழுந்த உடலின் ஓசை!"

"நாலு நாட்கள் நீடிக்கலாமா?"

"இன்றைக்கே!—இதென்ன குடிசையில் வெள்ளம்"

"நீ போ இதோ வருகின்றேன்."

எட்டு

"தேம்பி அழுது திட்டென்று வீழ்ந்து கண்ணீரை ஆறுய்ப் பெருக்கினை அன்புடையாளே!"

"இறக்கவில்லை அத்தான்" உனை விட்டுப் பிரியவில்லை" என்று நீங்கள் உறுதி கூறு மட்டும்."

"கடமை என் வாயை அடைக்கிறது"

"என் மடமை கிடந்து துடிக்கிறது"

மடமை! அல்ல உயிரின் இயற்கை"

"தந்தை சொற்படி நடக்கட்டும் என் அத்தான்" என்று என் நெஞ்சுக்குக்கூற என்னால் முடிகிறது; உயிருக்குச்சொல்லி நிறுத்த முடியவில்லை."

ஒன்பது

"தோழி, நான் அப்பாவிடம் போகிறேன்."

"நீர் நிலையை அடுத்த குடிசையிலா அப்பா இருக்கிறார்."

"என் கால்கள் என்னை ஏமாற்றுகின்றன. என் பிரிவால் அவள் சாகிறாள். சென்று காப்பாற்று".

"எவ்வளவு நேரம்?"




"நேரமா?"

"எத்தனை நாள்?"

"நாளா? அடுத்த ஆண்டில் வந்து விடுவேன்."

கால் நாழிகை, சாக்காட்டின் கதவைச் சாத்திப் பிடித்துக்கொண்டிருக்க முடியும். ஐயா அடுத்த ஆண்டில் அவள் உடலின் துகள் கலந்த மண்ணும் மட்கி வெளியுடன் வெளியாய்க்கலந்த தென்ற கதை பழமையாய்விடும்."

"என் துன்ப உள்ளத்தைத் தந்தையிடம் கூறுகிறேன்."

பத்து

நூலேணியில் அழுகுரல், கண்ணீர் - அவன் கப்பலேறுகிறான்.

கப்பலுக்குள்—"இங்கே உட்கார வேண்டும் நீவிர்."

"கணவனும் மனைவியும் தங்கும் இடமல்லவா இது?"

"உம் மனைவி இறந்தாளா?"

"இறந்திருப்பாளானால் அது அவள் செய்த முதல் குற்றம்: இறந்த செய்தியை என் காதில் எட்டாதிருக்க முயன்றிருப்பாளானால் அது இரண்டாவது குற்றம்."

இரண்டாவது குற்றத்திற்கு அவள் ஆளாகவில்லை தன்னிலையை விளக்கும்படி என்னை அனுப்பினாள்.

பயனற்றது இவ்வுலகம்! ஒருபற்று என்னை வாட்டுகின்றது அவள் இறந்தாள் ஆதலால் நான் இறந்தேன். இதை அவள் அறியாளே! நீவிர் சான்றாகக் கடலில் கலக்கிறேன்.

சிரிப்பு!—இரண்டு இளைஞர்கள் தோழியும் தலைவியுமாகிறார்கள்.

"அத்தான், நாம் இருவரும் சிங்கைக்குப் போகிறோம்.

தோழி! என் மாமாவிடமும் அத்தையிடமும் உடலும் உயிருமாக இருவரும் செல்லுகின்றார்கள் என்று கூறு!

வாழ்க காதல் வாழ்வு!



# நாத்திகன்

(சிந்து கண்ணி.)

பன்றியை வெட்டிப் படைத்தாயே—கடைப்
பட்டைச்சாராயம் கொடுத்தாயே
தின்று குடித்து நலம் செய்யுமாம் என்று
தெய்வத்தின் மேன்மை கெடுத்தாயே.

மின்நிகழ் கோழிய றுத்தாயே—கரு
மேதியின் வாழ்வை ஒறுத்தாயே
கொன்றால் நலம்செய்யும் என்றெண்ணியே தெய்வக்
கொள்கையை முற்றும் வெறுத்தாயே.

பெண்டிரைக் கேட்டது தெய்வம்என்றும்—தன்
பெண்டினைத் தந்தனன் மன்னன் என்றும்
கண்டார் நகைக்கப் புராணங்கள் போற்றிக்
கசப்பாக்கினாய் கடவுட்சிறப்பை.

அண்டும் குடல்தன்னைக் கொள்ள வைத்தாய்—அதற்
கங்காளம் மைப்பட்டம் ஒவ்வ வைத்தாய்
தொண்டிது தெய்வத்துக் கென்றெண்ணியே—அதன்
தூய்மையும் வாய்மையும் நீ அழித்தாய்.

குழந்தையைக் கேட்டது தெய்வம் என்றாய்—அதைக்
கொன்று சமைத்திட்ட தாய்ப்புகன்றாய்
தழைந்த அருட்பெரும் தந்தையை இவ்வணம்
தாழ்வுபடுத்தி மகிழ்ந்து நின்றாய்.

எவ்வுயிருங் கடவுட் கோயிலென்னும்
எண்ணத்தை நீ ஒப்புவாயாகில்—ஓடிக்
கவ்வவரும் வெறி நாய்போலே சாதிக்
கட்டுக்கள் ஏன்வரும் உன் வாயில்?

அவ்வவர் எண்ணுக்கு [illegible] ளில்
அன்புக்குப் பெண்டாட்டி பிள்ளைகளின்
ஒவ்வாத செய்கைகள் கண்டாக்கியே தெய்வ
உண்மை மறுப்பதுவா உன் தவம்?

கொழுந்தனை யாளிடம் தூதாக—உருக்
கொள்ளாப் பெரும்பொருள் சென்றதெனில்
அழிந்ததன்றோ உன்றன் உள்ளத்திலே—பொருள்
உண்டெனும் கொள்கை! சொல்வாயாக.

# திருமண வாழ்த்து

ஒருமன தாயினர் தோழி—இந்தத்
திருமண மக்கள் என்றும் வாழி!

பெருமன தாகி இல்லறம் காக்கவும்
பேறெனப் படும்பதி னறையும் சேர்க்கவும்

ஒருமன தாயினர் தோழி!—

மருமலர்த் தார்புனை மார்ப னேடும்
மழைபோற் கூந்தல் அழகன்னப் பேடும்
வருவார் என அந்தப் பஞ்சணை தேடும்!
வந்து வரைவார் இன்ப இலக்கிய ஏடும்!

ஒருமன தாயினர் தோழி!

இந்நாள் போலே எந்நாளு முண்டும்
இன்பம் எனவே ஒவ்வோர் இமைப்போதும் தாண்டும்!
செந்தமிழ் நாட்டிடைத் தொண்டுகள் யாண்டும்
செயத்தக்க மக்களை இவர்பெற வேண்டும்

ஒரு மனதாயினர் தோழி!

---

**அறிக்கை :**

நம் குயிலினின்று வரியையோ பாட்டையோ நம்மைக் கேளாது எவரும், எவ்விடத்தும் எடுத்தாளுதல் கூடாது.

உரியவர் - ஆசிரியர்.

அடுத்த நூல் (குயில்) நமக்குரித்தான அச்சகத்தில் எல்லாவகை அமைப்புக்களுடனும், குறைபாடின்றி, வெளி வரத் தக்க ஏற்பாடுகள் அனைத்தும் செய்தாயிற்று.

அமைச்சர்

95, பாரதிதாசன் பதிப்பகம்
புதுச்சேரி.

# மலையூற்று

(எண்சீர் விருத்தம்)

கருத்தூற்று மலையூற்றாய்ப் பெருக்கெடுக்க வேண்டும்
கண்டதைமேற் கொண்டெழுதிக் கட்டுரையாக்குங் கால்
தெருத்தூற்றும்; ஊர் தூற்றும் தம்முளமே தம்மேற்
சிரிப்பள்ளித் தூற்றும். நலம் செந்தமிழ்க்கும் என்னும்?
தரத்தம்மால் முடிந்தமட்டும் தரவேண்டும் பின்னால்
சரசரெனக் கருத்தூறும் மனப்பழக்கத் தாலே!
இருக்கும் நிலைமாற்ற ஒரு புரட்சிமனப் பான்மை
ஏற்படுத்தல், பிறர்க்குழைக்கும் எழுத்தாளர் கடனும்.

விருப்பத்தை நிறைவேற்ற முயலுங்கால் வையம்
வெறுந்தோற்றம் என்னும்ஒரு வேதாந்தப் பேச்சேன்?
மரத்தடியில் மறைந்திருந்து வாலியினைக் கொன்ற
மட்டமுறு கருத்துக்கள் இப்போது வேண்டாம்.
உரத்தினிலே குண்டு புகும் வேளையிலும் மக்கள்
உயிர்காக்கும் மனப்பான்மை உண்டாக்க வேண்டும்
பெருநிலத்தார் எல்லோரும் ஒருதாயின் மக்கள்
பிறர்தமர்என் றெண்ணுவது பேதமையே அன்றோ!

பொதுமக்கள் நலம்நாடிப் புதுக்கருத்தைச் சொல்க!
புன்கருத்தைச் சொல்லுவதில் ஆயிரம்வந் தாலும்
அதற்கொப்ப வேண்டாமே! அந்தமிழர் மேன்மை
அழிப்பாரைப் போற்றுதற்கும் ஏடுபல வாழ்ந்தால்
எதிர்ப்பதன்றோ தமிழர்களின் எழுதுகோல்வேலை?
ஏற்றசெயல் செய்தற்கும் ஏன் அஞ்சவேண்டும்?
உதிர்த்திடுக பொன்மலர்கள் உயர்கைகள், நன்றே
உணர்த்திடுக உளங்கவரும் புதுமணத்தை யாண்டும்.

சர்வசித்து ஆடி முதல் துவக்கம்.

# பாரதிதாசன் கவிஞர் கழகம்

## புது நிறுவனம்

தலைவர், ஆசிரியர் பாரதிதாசன் (கனக சுப்புரத்தினம்)

1. பெயர் : பாரதிதாசன் கவிஞர் கழகம்.

2. இடம் : வியாசர்பாடி, அறநிலையம் சென்னை.

3. நோக்கம் : தமிழ்க் கவிஞர்களை உண்டாக்குவது இவ்வாண்டில் பத்துப்பேர் மாணவராகச் சேர்த்துக் கொள்ளப் பெறுவார்கள்.

4. கட்டணம் : உணவு, உறையுள், இலக்கியம், யாப்பு இசை, தொழில் இவையனைத்திற்கும் கட்டணமாக ஒவ்வொரு மாத முதலிலேயே 20 ரூபாய் விழுக்காடு செலுத்திவர வேண்டும். கட்டணம் முழுதும் கட்ட இயலாதது காட்டுவாராயின் இத்திட்டம் தளர்த்தப் படும்.

5. தேர்தல் : முதல் நான்கு மாதம் கவிஞர், அ. பா. க. (அணுகு வகுப்பு, பாரதிதாசன் கவிஞர் கழகம்) அடுத்த நான்கு மாதம் கவிஞர் ஆ. பா. க. (ஆ-ஆக்கல்) கடைசி நான்கு மாதம் கவிஞர் இ. பா.க. (இ-இசை அதாவது புகழ்) எனத்தேர்வு நடத்தித் தேர்ந்தார்க்குப் பொற்பணியும் நற்சான்றும் வழங்கப் பெறும்.

6. இத்திட்டம்; மற்றும் கழகச்சட்டம்: அவ்வப்போது தலைவரால் திருத்தவும் வேறு பொருத்தவும் பெறும்.

சேர விரும்புவோர் :
31, வைதியநாத முதலி தெருவு, சென்னை.
பாரதிதாசன்
என்ற முகவரிக்கு விண்ணப்பிக்க

# செந்தமிழ் நாடு

(இருபொருள் வெண்பா)

அண்டிமுயல் வேங்கைவர, அன்புடையாள் ஆளன்வரக்
கண்டிறக்கும் காடு கமழ்நாடு—வண்டு
பறக்குமென் கூந்தலார் பற்றும் அறமே
சிறக்குமென் செந்தமிழ் நாடு.

இதில் கண்டிறக்கும் என்ற தொடரானது, கண்டு+இறக்கும் என்றும் கண்+திறக்கும் என்றும் பிரிக்கப் படும் வகையால் இருபொருள் தருகின்றது. எனவே, அண்டும் முயல் வேங்கை வர, கண்டு, இறக்கும் காடு கமழ் நாடு என்றும், அன்புடையாள் ஆளன் வரக் கண் திறக்கும் காடு கமழ்நாடுஎன் றும் வரிசைப்படுத்திப்பார்த்துப்பொருள் கொள்ளவேண்டும்.

ஒருபுறம் அண்டிய முயலானது வேங்கை (திடீரென்று) வரக்கண்டு (அச்சத்தால்) இறந்துபோகின்ற காடு, தன்னிட மிருக்கும் சந்தனம் அகில் முதலியவற்றால் மணம் வீசுகின்ற நாடு,

மேலும்,

அன்புள்ள குறப்பெண்(தோழி முதலியவர் என்ன கூறியும் கட்டதலை நிமிராமல்) ஆளன் வரவே, கண் திறந்து மகிழ்கின்ற காடு, கமழ்நாடு.

இத்தகைய நாடு எப்படிப்பட்டது? யாருடையது எனில், வண்டானது குடியிருக்கும் மலர்த்தேன் கருதிப்பறந்து கொண் டிருக்கும் கூந்தலுடைய பெண்கள் விரும்பி நடத்துகின்ற அறமே சிறந்திருக்கின்ற என் செந்தமிழ் நாடு என்பது இச் செய்யுளின் பொழிப்புரை.

கூடிக் குலவுநரும் கொல்புலியைச் சீறுநரும்
ஓடத் துலாவெடுக்கும் ஒண்குன்ற—நாடுதான்
ஆர்ந்ததென் பாற்குமரி ஆம்வடக்கு வேங்கடமே
சேர்ந்ததென் செந்தமிழ் நாடு.

ஓடத்து+உலா எடுக்கும் என்றும், ஓட துலா எடுக்கும் என்றும் இருவகையாய்ப் பிரித்துப்பொருள் கொள்க. உலா எடுத்தல்-உலாவி வருதல் துலா எடுத்தல்—துலாக் கோலைத் தூக்குதல். குலவுநர்-குலவுகின்றவர், காதலர்கள் சீறுநர்-சீறுகின்றவர். ஒண்குன்றம்-ஒளிமிகுந்தமலை ஆர்ந்த-நிறைந்த புனல்நிறைந்த என்றபடி சேர்ந்ததென்-சேர்ந்தது என் எனப்பிரிக்க.

மேலட்டை ஓவியம் :

# ஆடவந்தாள்

அவன் :

ஆடற் கலைக்கழகு தேடப் பிறந்தவள்
ஆடாத பொற்பாவை ஆடவந்தாள்;
என்னோடாட வந்தாள்;
மகிழ்ந்தாட வந்தாள்! (ஆ)

வாடாத தாமரைக்கை வானில் ஒளி தெறிக்க
மங்காத செங்காந்தள் விரல்கள் பொருள்குறிக்க (ஆ)

ஓடுபிளந்த செம் மாதுளைபோல் உதட்டில்
உள்ளம் விளைத்தநகை மின்னவும்—கார
தோரத்து வண்டுவிழி ஓடை மலர் முகத்தில்
ஓடிஎன் உளங்கவர்ந்து தின்னவும்
காடு சிலிர்க்கும்படி மேலாடு முன்தானை
காற்றோடு காற்றாகப் பின்னவும்
காதற் கரும்பொன்று காலிற் சிலம்பணிந்து
கடிதில் இடை துவள ஆடியதோ என்னவும் (ஆ)

அவள் :

பொன்மேனி காட்டி எனை இன்பத்தில் ஆழ்த்தினான்
பூரிப்பிலே எனையும் ஆட வைத்தான்
தன்னோடாட வைத்தான்
மகிழ்ந்தாட வைத்தான் (பொ)

தென்றல்வரும் சந்தனப் பொதிகைமேல் அருவிபோல்
தேனான செந்தமிழ்ச் சிந்தொன்று பாடினான் (பொ)

புன்னைமலர்க் காம்பு போன்றதோர் சிற்றடிப்பு
ருவும் மயிலும் களிகூவன்றவே—அவை
பூணும் அசைவுகளில் காணும் அழகினின்று
புதிய எண்ணம் ஒன்று தோன்றவே
அன்ன ஆடற்கலை உலகுக்களித்த தமிழ்
அரசர்பெருங் குடியைச் சேர்ந்தவன்
ஆடினேன் அவனோடாடினேன் உற
வாடினேன் மகிழ்ந்து கூடினேன். (பொ)

# மருத்துவர் வீட்டில் அமைச்சர்



மருத்துவர்—வாங்க வாங்க நீங்க ஆரு?

அமைச்சர்—கல்வி அமைச்சன் நான்! கண்ணு தெரியலே

மருத்துவர்—வாங்க வாங்க நீங்க தானு?
என்ன சேதிங்க.

அமைச்சர்—இன்ன நோயிண்ணே இன்னும் புரியலே
கையை பாருங்க கருத்தா!
[மருத்துவர் நாடியை நாடுகிறார்.]

மருத்துவர்—தானே வந்த நோய் அல்ல.
தேடி நீங்க சேத்தநோய் தானுங்க.

அமைச்சர்—இந்த நோய்க்குப்பேர் இன்னதிண்ணில்லியா?

மருத்துவர்—இருக்ற குறிப்பே எடுத்துச் சொல்றேன்:
நாக்லே துடுக்கு, நடையிலே பதறல்
மூக்லே எரிச்சல் முன்தொடை நடுக்கம்
கண்ணிலே கொஞ்சம் கசப்பான தோற்றம்
இருக்குதா இல்லியா?

அமைச்சர்—இருக்குதே இருக்குதே! என்ன பண்லாங்க?

மருத்துவர்—இலேசாத் தீந்திடும் இந்தநோய் – ஓர்வகைக்
காரகத் தாலே கண்டது.
சீரகத் தாலே தீரணும் அமைச்சரே!

---

காரகம் - ஒருநோய். அதுவே கார்அகம் எனப்பிரிந்து, கருமையான உள்ளம் அதாவது தெளிவற்ற உள்ளம் எனப்பொருள்படும்.

சீரகம் - மருந்துச்சாக்கு அதுவே சீர்அகம் எனப்பிரிந்து உயர்ந்த உள்ளம் எனப்பொருள்படும்.

நான்கு

"தேக்கும், அதில் உடல் பின்னிய சிந்தற் கொடியும் பார்; நம்மைப்போல!"

இல்லை. அரண்மனை கசந்தால் அழகியகுடிலில் குடியேறத் தேக்கு நடவாது; சிந்தல் நகராது."

வானில் ஓர் ஒலி!

"வைகறையின் மங்கிய ஒளியில் மங்காத இன்னிசையை உதிர்த்தன வானப்புட்கள், ஆணும் பெண்ணுமாக"

நாமும் வானில்—அடடா சிறகில்லையே!

நீர்நிலை கட்டித்தழுவிக் கொண்டது இருவரையும்.

ஐந்து

கெண்டைகள் துள்ளி விளையாடி நீரின் அடிமட்டத்தில் அள்ளி நுகர்வன இன்பத்தை!"

நாமும் அங்கு இன்பம் நுகர்வோம்—அடடா நாம் மீன்களல்லவே!

"கண்ணிமைப்போது நான் நீருக்குள் ஒளிந்து கொள்ளுகிறேன், "பிற்பகுதியும் கேள்."

"நிறுத்துங்கள்! முற்பகுதியே என்பாதி உயிரைப்போக்கி விட்டது".

மாற்றிச் சுவைக்கும் நான்கு விழிகள் தம்மிற்பிரியாமல் நீராடின.

ஆறு

"கரையேறுங்கள் என்னோடு".

"மாலையின் குளிரும் நனைந்த சேலையின் குளிரும் உன் இன்பத்தைப் பெருக்க வில்லையா?"

"தவறு! நம் இருவர்க்கும் நடுவில் முயல் நுழையும் வெளி, இதற்கு! நனைந்த ஆடை காரணம்"

"அதோ, நம்மை நோக்கி நம் வீட்டு ஆள்"

குடிசையில் மறைந்தார்கள் ஓடி!

ஏழு

"அழைத்து வரச்சொன்னார்கள் அப்பா"

"ஏன்?"



நக. ஆடலரசு

## அரசியல் வகையின்
## அயல்மொழிப் பெயர்கள்

### சோஷலிசம்

இரண்டு கறவைகள் உன்னிடம் இருந்தால்
அண்டைவீட் டானுக்கொன் றளித்தல் "சோஷலிசம்"

### காப்டலிசம்

கறவைகள் இரண்டில் கடிதொன்றை விற்றுக்
காளை வாங்குவது "காப்டலிசமாம்"

### கம்யூனிசம்

ஆவிரண்டினையும் ஆள்வார்க் குவிற்றுத்
தேவைக்குப் பால்பெறச் செப்பல் "கம்யூனிசம்"

### பாசிசம்

பகர் இருகறவையைப் பறித்த ஆள்வோரிடம்
தொகைதந்து பால்பெறச் சொல்வது "பாசிசம்"

### நாசிசம்

உரியவன் தன்னை ஒழித்தே அவனின்
கறவையிரண்டையும் கைப்பற்றல் "நாசிசம்"

### பியூடலிசம்

இரண்டு கறவையால் திரண்ட பால் அனைத்தையும்
சாக்கடைக்காக்குவது தான் "பியூடலிசம்"
எதனை இவற்றில் ஏற்பாய்?
அதனால் உன் நாட்டைக் காக்குக தோழனே !

# அவன் வரவில்லை

(சிந்து கண்ணி.)

மங்கைமா ரோடு கூடி மடுக்கரை செல்லு கின்றாய்
“தங்கமே என்விண் ணப்பம் ‘தனித்துவா’ என்ப தாகும்
இங்ஙனம் சொன்னான் சொல்லி எழிலுறு முகத்தை இங்கே
பொங்குதா மரையில் காட்டிப் பொன்னுடல் மறைத்திட் டானே!

குடத்தினை இடையில் தாங்கிக் குளிர்புனல் மடுவைச் சார்ந்த
இடத்தினை அழகு செய்யத் தனித்துவா என்று கூறித்
தடத்தில்நான் வருந்தும் வண்ணம் தடந்தோளைக் குன்றில் வைத்தான்
குடத்தேனை நிகர்த்த மெய்யைக் கொண்டுபோய் வீட்டில் வைத்தான்!

வெறுத்திட அயல்மங் கைமார் மேவிட வந்தால், உன்பால்
குறுக்கிட்டுப் பேச அன்பிற் குளித்திட முடியா தென்றே
அறுத்துப் பேசியதால் வந்தேன் அழகாடு நடையை அன்னோன்
தறுக்குறு களிற்றில் வைத்தான் தன்னுடல் மறைந்திட் டானே!

(களிறு-ஆண்யானை.)

வரிப்புலி போன்ற நீழல் மண்ணிலே காட்டும் ஆல
மரத்திடைத் தனித்தி ருந்தால் வரத்தடை இல்லை என்று
விரிப்புறச் சொல்லி என்றன் விருப்பத்தைப் பெருக்கினான் தான்
சிரிப்பைமுல் லைபால் காட்டித் திருமேனி மறைத்திட் டானே.

சதிர்வரு நடையும் உன்றன் தனிமையும் இனிக்க அங்கே
எதிர்வரக் காத்திருப்பேன் மடுக்கரை வாராய் என்றான்.
முதிர்தரு காதல், பொங்க முன்னங்கை வளையும் சோர்ந்தேன்
கதிரில்தன் பார்வை காட்டிக் கனியுடல் மறைத்திட் டானே

# மருமகள் பூரிப்பு

(சிந்து கண்ணி.)

தென்றல் அடிக்கையில் பச்சிளங் கீற்றுச்
சிலிர்த்து நிலைகுலைந் தாடுதல் போல்
இன்றைக்கு நீகொண்ட பூரிப்பின் காரணம்
என்னடி மின்னல் இடைச் சிறுக்கி?
நின்றஉன் கால்கள் நிலைக்கவில்லை கடல்
நீராய் நெளிந்தது பொன்னுடலும்!
அன்றைக்குச் சென்றவன் · என்மகன்: வீட்டை
அடைந்த மகிழ்ச்சித் திருக்கூத்தோ?

மாற்றியணிவதும் சேலையினை, மலர்
வாங்கியணிவதும் கூந்தலினை, ஒரு
காற்றென ஓடிச் சிரிக்கும் முகத்துக்குக்
கண்ணாடி காட்டிப்பின் மீளுவதும்
நேற்றில்லையே! இன்று பூரிப்ப தென்னடி
நீள்புருவத்து நிலாப்பிறைச்சி?
வேற்றூர்க்குச் சென்றவன் என்மகன் வீட்டுக்கு
மீண்ட மகிழ்ச்சித் திருக் கூத்தோ!

கறிகள் சமைத்தபின் தெருவினில் விற்றிடும்
காய்களை ஓடி அழைப்பதுவும்,
சிறுவிரல் மோதிரம் பார்ப்பதும், பார்த்து
மகிழ்வதும் செவ்விதழ் சேர்ப்பதுவும்,
அறையினை நோக்கலும் நேற்றில்லையே, நீ
அப்படிப் பூரிப்ப தேதுக்கடி?
பிறநகர் சென்றவன் - எல்மகன் - ஊர்வரப்
பெற்ற மகிழ்ச்சித் திருக் கூத்தோ!

கச்சையை நோக்கலும், கண்கள் மலர்வதும்,
கைவளையைச் சரிசெய்வதுவும்.
மொச்சை உரிக்கையில் முன்கட்டில் ஓடி, மு
ழங்கும் சிலம்படி மீளுவதும்,
பச்சைப் பசுங்கிளி தானெனக் கொஞ்சலும்
பார்த்திலனே இன்று பூரிப்ப தேன்?
ஆச்சீமை சென்றவன் - என்மகன் - வீட்டை
அடைந்த மகிழ்ச்சித் திருக் கூத்தோ!

விரைவில் வெள்ளித்திரைக்கு!

நாடக மேடையில் வெற்றிகண்ட கவிஞரின் காதல் ஓவியம்

# பில்ஹணன்

டி. கே. எஸ்,

&

சகோதரர்கள்

சேலம்

ஷண்முகா

பிலிம்ஸ்

தயாரிப்பு.

கவிஞர்

பாரதிதாசனின்

புரட்சிக்கவியிலுள்ள

கவிதைக் கருத்துக்கள்

நிறைந்தது.



டி. கே. ஷண்முகம்,

டி. கே. பகவதி, திரௌபதி

ஸ்ரீ பால ஷண்முகானந்த சபா

நடிக நட்சத்திரங்கள்

அனைவரும் நடிக்கின்றனர்





கதை-வசனம்,
ஏ. எஸ். ஏ. சாமி.

பாடல்கள்
மதுர பாஸ்கரதாஸ்

டைரக்ஷன்
கே. வி. சீனிவாசன்

பின்னணி இசை
கல்யாணம்

நடனம்
குமார்

ஸ்டுடியோ
சென்ட்ரல்